23rd January 1961]

தகராறு வந்ததாகத் தெரிகிறது. இது மத்திய சர்க்காருக்கும், சிலோன் சர்க்காருக்கும் உள்ள தொடர்பைப் பற்றியது. இதைப் பற்றி மற்றபடி விரிவாகச் சொல்வதற்கு இல்லை.

SRI M. KALYANASUNDARAM : கச்சா தீவு யாருக்குச் சொந்தம் என்பது இப்போதாவது தெளிவுப்படுத்தப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நமக்குத்தான் சொந்தம் என்று நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இப்போது சிலோனிலே, இந்தியாவுக்கும் சிலோனுக்கும் உள்ள நல்லுறவை வளர்க்க வேண்டும் என்று விரும்புகிற சர்க்கார் அமைந்திருக்கிற காரணத்தினால் இந்தப் பிரச்சனையை சுமுகமாகத் தீர்க்க மத்திய சர்க்கார் மூலம் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாப் பிரச்சனைகளையும் சுமுகமாகத் தீர்க்கப் போவதாக இலங்கைப் பிரதமர் சொன்னதாக பத்திரிகையில் பார்த்தேன். முக்கியப் பிரச்சனைகள் எல்லாம் தீர்க்கப்படும்போது இந்தச் சிறு பிரச்சனையும் தீர்ந்துவிடும் என்று நினைக்கிறேன்.

*Overhead tank (Nariyambattu)*

* 99 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state the reasons for the delay in constructing an overhead tank at Nariyambattu Panchayat, North Arcot?

THE HON. SRI C. SUBRAMANIAM : The work could not be commenced immediately after the inclusion of the work in the Local Development Works Programme as there was no suitable source of water-supply. The construction of a new well was therefore taken up and completed by March 1960. The estimate for the construction of the overhead tank is under scrutiny by the Sanitary Engineer, Madras. The construction of the overhead tank will be taken up after technical sanction to the estimates is accorded by the Sanitary Engineer.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. the Minister aware that the foundation stone was laid by the Hon. the Chief Minister in January 1960 and now the technical sanction also has been granted? Will the Government expedite the construction of the overhead tank?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is what I said. The technical sanction of the Sanitary Engineer is awaited. As soon as the technical sanction is given, the work will be taken up.

*Roads (Thanjavur)*

* 100 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the extent of each taluk in Thanjavur district and the population of each taluk;

[23rd January 1961

(*b*) the length separately of Central Roads (National Highways) State Highways, Major District Board Roads, other District Board Roads in each taluk; and

(*c*) how many miles of roads have been newly laid during the Second Five-Year Plan and how many miles of these roads have been (i) metalled with white concur or screened gravel, (ii) metalled with granite metal, (iii) blacktopped newly during the Second Plan period so far in each taluk?

THE HON. SRI P. KAKKAN : The information [a] is laid on the table of the House.

**SRI N. R. THIAGARAJAN :** ஸார், சில தாலூக்காக்களில் விஸ்தீரணம் அதிகமாக இருக்கிறது. ரோடுகள் குறைவாக இருக்கிறது. சில தாலூக்காக்களில் ஜனத்தொகை அதிகமாக இருக்கிறது. ரோடுகள் குறைவாக இருக்கிறது. தஞ்சை ஜில்லாவைப் பொறுத்தமட்டும் அல்லாமல் நம் ராஜ்யத்திலே விஸ்தீரணம் அதிகமாகவும், ரோடுகள் குறைவாகவும் உள்ள இடங்களில் மட்டும் புதிதாக ரோடுகள் போடவேண்டுமென்று திட்டவட்டமாக உத்தரவு போடுவார்களா ?

**THE HON. SRI P. KAKKAN :** தஞ்சை ஜில்லாவில் ரோடு போடுவது என்றால் பல கஷ்டம். எல்லாம் விளைவு நிலங்கள் ஒரு நிலத்தை எடுப்பது என்றால் ஆயிரம் தகராறு. ஆகவே எவ்வளவு தூரம் சாத்தியமோ அவ்வளவு தூரம் ரோடுகள் அமைக்க சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்கிறது. மற்ற விஷயங்களிலும் அக்கறை எடுத்துக்கொள்ளும்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் ஸ்ரீ என். ஆர். தியாகராஜனுக்கு ஒரு விஷயம் குறிப்பிட விரும்புகிறேன். எல்லா கிராமங்களையும் முக்கிய ரோடோடு கொண்டுவந்து சேர்க்கக்கூடிய ரோடுகளை தாலூக்கா வாரியாக எல்லா இடங்களிலும் செய்யவேண்டியது அவசியம். அது கவனிக்கப்படுகிறது. மற்ற ரோடுகளை தாலூக்கா வாரியாக எல்லா இடங்களிலும் அவசியம் இல்லை. எங்கு அவசியமோ அங்கு பெரிய ரோடு போட வேண்டுமென்பதுதான் சர்க்காரின் யோசனை.

**SRI A. VEDARATHNAM :** இந்த ஜில்லாவில் ஒரு தேசீய நெடுஞ்சாலை கூடக் கிடையாது. பம்பாயில் இருந்து கன்யாகுமரி வரையில் செல்கிற நெடுஞ்சாலை இருக்கிறது. அதுபோல கல்கத்தாவில் இருந்து கன்னியாகுமரி வரையில் செல்கிற நெடுஞ்சாலையை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு வற்புறுத்துவார்களா ? அப்படியானால் எப்போது எடுத்துக் கொள்ளப்படும் ? இப்போது இருக்கிற அந்தச் சாலை சிலவிடங்களில் இன்னும் கப்பி போடப்படாமல், சில பாலங்கள் கூடக் கட்டப்படாமல் இருக்கிறது. அவற்றை எல்லாம் நம் மாநில சர்க்கார் எப்போது செப்பனிடுவதற்கு எடுத்துக்கொள்வார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

---

a Printed as Appendix III on page 352–353 infra.

23rd January 1961]

**The Hon. Sri P. KAKKAN :** *தேசியப் பெருஞ்சாலை உண்டாக்க வேண்டுமானால் 100 அடி அகலம் வேண்டும். நடுவில் 50 அடி, இரு ஓரங்களிலும் 25, 25 அடி வேண்டும். அதற்கு லாயக்காக இருக்கிற ரோடுகளை தேசியப் பெருஞ்சாலையாக ஆக்க இந்தச் சர்க்கார் முன்வரும். கனம் அங்கத்தினர் சொன்ன பிரச்சனையும் பரிசீலனை செய்யப்படும் என்று சொல்ல விரும்புகிறேன்.*

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, even though the District Boards have made representations to the Government to take up the roads on which buses are running, still the Government have not come forward to take them up. May I know what is the reason for it?

The Hon. Sri P. KAKKAN : After considering all facts, the Government are going to take one by one as State Highways Roads.

**Sri M. K. SOMASUNDARAM :** *சர்க்கார் முதலிலே எடுத்துக் கொள்ள வேண்டிய ரோடுகள் இருக்கின்றன. இருந்தாலும் கூட லோகல் டெவலப்மெண்டு திட்டப்படி போடப்பட்ட ரோடுகள் அழியக்கூடிய முறையில் இருக்கின்றன. அதையாவது முதலில் எடுத்துக்கொள்ள முன் வருவார்களா ?*

**The Hon. Sri P. KAKKAN :** *ஏற்கெனவே லோகல் டெவலப் மெண்டு, கிராம அபிவிருத்தித் திட்டங்கள், தேசிய விஸ்தரிப்புத் திட்டங்கள் முதலியவற்றின் மூலம் போடப்பட்ட ரோடுகளை சரி செய்வதற்காக 10 லட்சம் ரூபாய் இந்த வருஷம் ஒதுக்கப்பட்டிருக் கிறது.*

*Subramania Siva*

*** 101 Q.—Sri A. VEDARATHNAM :** *கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—*

*(அ) சேலம் ஜில்லாவிலுள்ள பாப்பாரப்பட்டியில் காலம் சென்ற தேசபக்தர் சுப்ரமணிய சிவா அவர்களின் ஞாபகச் சின்னம் ஏற்படுத்தவேண்டுமென்று அவ்வூர் வாசிகள் கோரிக்கை அனுப்பி இருக்கிறார்களா ?*

*(இ) அப்படியானால், அதன்பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?*

**The Hon. Sri C. SUBRAMANIAM :** *(அ) சுப்ரமணிய சிவா அவர்களுக்கு நினைவுச் சின்னம் நிறுவுவது குறித்துப் பாப்பாரப் பட்டிப் பகுதி மக்களிடமிருந்து, அண்மையில் கோரிக்கை எதுவும் வரவில்லை.*

*(இ) 1957-ம் ஆண்டில், சுதந்திரப் போராட்ட நூற்றாண்டு விழாவை ஒட்டி, சிவாவுக்கு நினைவுச் சின்னம் அமைக்க அரசாங்கம் உத்தேசித்திருந்தது. பாப்பாரப்பட்டியில் புதிதாகத்*